31900

OL/2017/61/T-I, II (NEW)

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / முழுப் பதிப்புரிமையுடையது /All Rights Reserved]

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

61 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

භූගෝල විද්‍යාව I, II
புவியியல் I, II
Geography I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

சுட்டெண் : ..............................

## புவியியல் I

※ இவ்வினாத்தாள் **40** வினாக்களைக் கொண்டுள்ளது.
※ ஒவ்வொரு வினாவுக்கும் கொடுக்கப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கேற்ப **எல்லா** வினாக்களுக்கும் **இவ்வினாத்தாளிலேயே** விடை எழுதுக.

● **1** தொடக்கம் **10** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலுமுள்ள வெற்றிடத்துக்குப் பொருத்தமான விடையை அடைப்புக்குறியினுள்ளே உள்ளவற்றிலிருந்து தெரிந்தெடுத்து **புள்ளிக்கோட்டின் மீது எழுதுக.**

**1.** வளிமண்டலத்தில் உள்ள மொத்த வாயுக்களின் கொள்ளளவில் ஏறக்குறைய ........... புவி மேற்பரப்பிலிருந்து ஏறக்குறைய 6 கி. மீற்றர் வரையுள்ள பகுதியில் காணப்படுகின்றது.
(25% / 50% / 75%)

**2.** உயரத்துடன் வெப்பநிலை வீழ்ச்சியடைந்து செல்வது ............................ மண்டலத்தின் ஒரு விசேட அம்சமாகும்.
(மாறன் / படை / வெப்ப)

**3.** பப்புவா நியூ கினியா தீவானது ......................................... கண்ட மேடையில் அமைந்துள்ளது.
(ஆசியா / ஆபிரிக்கா / அவுஸ்திரேலியா)

**4.** டானியூப் ஆறு ....................................... கடலுக்குள் பாய்கின்றது.
(மத்தியதரை / கருங் / கஸ்பியன்)

**5.** மேற்கு ஐரோப்பாவிலுள்ள நாடுகளுள் ....................................... வர்த்தகரீதியான பாற்பண்ணைக் கைத்தொழிலுக்குப் புகழ் பெற்றது.
(இத்தாலி / பிரான்ஸ் / டென்மார்க்)

**6.** உவரான மணல் மண்ணும் தொடரலை நிலமும் .............................. பயிர்ச்செய்கைக்கு மிகவும் பொருத்தமானது.
(தெங்கு / நெல் / இறப்பர்)

**7.** இலங்கையில் சிறு ஏற்றுமதிப் பயிர்களின் ஆராய்ச்சி நிறுவகம் ......................................... இல் அமைந்துள்ளது.
(கண்டி / மாத்தளை / அம்பாந்தோட்டை)

**8.** இலங்கையில் மரபுரீதியான குடிசைக் கைத்தொழிலாக விளங்கும் பித்தளைப் பொருட்களின் கைத்தொழிலுக்குப் பிரசித்திபெற்ற இடமாக ...................................... முக்கியத்துவம் பெறுகிறது.
(அம்பலாங்கொட / மொறட்டுவ / பிலிமத்தலாவ)

**9.** 1 : 50 000 இடவிளக்கப் படங்களில், திசையைக் காட்டும் வரைபடத்தில் நட்சத்திரத்துடன் முடிவடையும் கோட்டினால் ................................................... குறித்துக் காட்டப்படுகின்றது.
(உண்மை வடக்கு / காந்த வடக்கு / அளியடைப்பு வடக்கு)

**10.** .................................... இலங்கையில் கடும் பாதுகாப்புக்கு உட்பட்ட இயற்கை ஒதுக்கிடப் பகுதியாக பிரகடனம் செய்யப்பட்டுள்ளது.
(றிட்ரிகல / வில்பத்து / ஹோட்டன் சமவெளி)

[பக். 2 ஐப் பார்க்க.

Department of Examinations Sri Lanka

- 11 தொடக்கம் 15 வரையுள்ள கூற்றுக்கள் ஒவ்வொன்றையும் வாசித்து, அவை சரியாயின் ச ஐயும் பிழையாயின் பி ஐயும் சுற்றி வட்டம் வரைக.

**11.** இந்தோ - இலங்கை எல்லைக்கோட்டுக்குரியதாகக் காணப்படும் மன்னார் கடல் பகுதி, பாக்கு நீரிணை, வங்காள விரிகுடா ஆகியவற்றினை உள்ளடக்கிய சமுத்திர எல்லைக்கோடானது வரலாற்று நீர்கள் என அழைக்கப்படும். ச / பி

**12.** இலங்கையில் பரந்தளவில் பயன்படுத்தப்படும் சக்தி மூலாதாரம் பெற்றோலியமாகும். ச / பி

**13.** உலகின் மொத்தக் குடித்தொகையில் ஏறக்குறைய 90% தென் கோளத்தில் காணப்படுகின்றது. ச / பி

**14.** மானிட அபிவிருத்திச் சுட்டியின்படி உலக நாடுகள் நான்கு அபிவிருத்திப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ச / பி

**15.** கி.பி. 2000 ஆம் ஆண்டின் பின்னர் CFC வெளியேற்றத்தினை இழிவளவாக்கும் நடவடிக்கைகள் மற்றும் அவற்றினை முற்றாக இல்லாமல் செய்தல் தொடர்பான தீர்மானமானது 1992 இல் இடம்பெற்ற 'புவி உச்சி மகாநாட்டில்' எடுக்கப்பட்டது. ச / பி

- 16 தொடக்கம் 19 வரையுள்ள வினாக்களுக்கு அ மற்றும் ஆ என இரண்டு நிரல்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுக்கிடையிலான தொடர்புகளின் அடிப்படையில் பொருத்தும்போது கிடைக்கும் சரியான விடைக்குரிய **இலக்கத்தினைப் புள்ளிக்கோட்டின் மீது எழுதுக.**

**16.** இலங்கையில் காணப்படும் சில கனிப்பொருட்கள் நிரல் அ இல் தரப்பட்டுள்ளன. அவை படிந்து காணப்படும் இடங்கள் நிரல் ஆ இல் தரப்பட்டுள்ளன. அ நிரலிலுள்ள ஒழுங்குடன் ஆ நிரலைப் பொருத்திப் பார்க்கும் பொழுது கிடைக்கும் சரியான விடையைத் தெரிவு செய்க.

| அ | ஆ |
|---|---|
| 1. இரத்தினக் கற்கள் | A - புல்மோட்டை |
| 2. சிர்கோன் | B - ஒக்கம் பிட்டிய |
| 3. காரீயம் | C - மீரிகம |
| | D - மாரவில்ல |

(1) A, B, C (2) B, C, A (3) B, D, A (4) B, A, D (.........)

**17.** இலங்கையில் பரந்தளவில் காணப்படும் சில மண் வலயங்கள் நிரல் அ இல் காட்டப்படுகின்றன. அவை பரம்பிக் காணப்படும் பகுதிகள் நிரல் ஆ இல் தரப்படுகின்றன. அ நிரலிலுள்ள ஒழுங்குடன் ஆ நிரலைப் பொருத்திப் பார்க்கும் பொழுது கிடைக்கும் சரியான விடையைத் தெரிவு செய்க.

| அ | ஆ |
|---|---|
| 1. கல்சியமற்ற கபில மண் | A - புத்தளத்திலிருந்து முல்லைத்தீவு வரைப்பட்ட கரையோரப் பகுதி |
| 2. செம்மஞ்சள் லட்டோசோல் மண் | B - அம்பாறை மற்றும் மட்டக்களப்பு மாவட்டங்கள் |
| 3. சொலிடெக்ஸ் மண் | C - தமண மற்றும் தமன்கடுவைப் பிரதேசம் |
| | D - தாழ்நில ஈரவலய மாவட்டங்கள் |

(1) A, B, C (2) B, C, D (3) D, B, A (4) B, A, C (.........)

**18.** உலகின் சில கண்டங்களின் பெயர்கள் நிரல் அ இல் தரப்பட்டுள்ளன. அவற்றில் அமைந்துள்ள ஏரிகளின் பெயர்கள் நிரல் ஆ இல் காட்டப்படுகின்றன. அ நிரலிலுள்ள ஒழுங்குடன் ஆ நிரலைப் பொருத்திப் பார்க்கும் பொழுது கிடைக்கும் சரியான விடையைத் தெரிவு செய்க.

| அ | ஆ |
|---|---|
| 1. ஆசியா | A - லடோகா ஏரி |
| 2. ஐரோப்பா | B - ரிட்ரிக்காகா ஏரி |
| 3. அவுஸ்திரேலியா | C - பைக்கால் ஏரி |
| | D - அயர் ஏரி |

(1) A, C, B (2) C, D, A (3) C, A, D (4) B, A, C (.........)

**19.** நெற் பயிர்ச்செய்கையில் ஈடுபடும் மூன்று நாடுகள் நிரல் அ இல் காட்டப்படுகின்றன. அந்நாடுகளில் நெற் பயிர்ச்செய்கை மேற்கொள்ளப்படும் சில ஆற்றுப் பள்ளத்தாக்குகள் நிரல் ஆ இல் காட்டப்படுகின்றன. அ ஒழுங்குடன் ஆ நிரலைப் பொருத்திப் பார்க்கும் பொழுது கிடைக்கும் சரியான விடையைத் தெரிவு செய்க.

| அ | ஆ |
|---|---|
| 1. ஐக்கிய அமெரிக்கா | A - போ நதிப் பள்ளத்தாக்கு |
| 2. அவுஸ்திரேலியா | B - சக்ரமன்ரோ ஆற்றுப் பள்ளத்தாக்கு |
| 3. இத்தாலி | C - நைல் கழிமுகம் |
| | D - முரே - டார்லிங் ஆற்றுப் பள்ளத்தாக்கு |

(1) B, D, A (2) D, A, B (3) A, B, C (4) B, C, D (.........)

[பக். 3 ஐப் பார்க்க.

Department of Examinations Sri Lanka
Department of Examinations Sri Lanka

● **20** தொடக்கம் **26** வரையுள்ள வினாக்களில் உள்ள வெற்றிடங்களைப் பொருத்தமான சொற்களைக் கொண்டு பூரணப்படுத்துக.

**20.** மரியானா மற்றும் மிண்டானோ சமுத்திர அகழிகள் ............................................ சமுத்திரத்தில் அமைவு பெற்றுள்ளன.

**21.** கிழக்கு ஆசியப் பிரதேசத்தில், இலத்திரனியல் கைத்தொழில் துறையில் ............................................ மேலாதிக்கத்தைப் பெற்றுவரும் நாடாகும்.

**22.** வடக்கு அகலக்கோடு $23\frac{1}{2}^{\circ}$ என்பது அயன ........................................ என அறியப்படும்.

**23.** இலங்கையின் மலைப் பகுதிகளில் நெல்லானது ............................................ பயிர்ச்செய்கை முறைப்படி பயிரிடப்படுகின்றது.

**24.** இலங்கையின் மொத்த உள்நாட்டு உற்பத்திக்கு, விவசாயத் துறையிலிருந்து அதிகளவான பங்களிப்பு............................................ பயிர்ச்செய்கை மூலம் வழங்கப்படுகின்றது.

**25.** 1 : 50 000 இடவிளக்கப் படங்களில் நிலவுருவங்களானது ........................................ மூலம் காட்டப்படுகின்றது.

**26.** காலத்துடன் தொடர்ச்சியாக மாற்றமடைந்து வரும் வெப்பநிலை போன்ற மாறிகளை எடுத்துக் காட்டுவதற்குப் பரந்தளவில் ................................ வரைபுகள் பயன்படுத்தப்படுகின்றன.

● **27** தொடக்கம் **30** வரையுள்ள வினாக்களுக்கு விடையளிப்பதற்கு தரப்பட்டுள்ள வரைபடத்தினைப் பயன்படுத்துக.




**27.** வரைபடத்தில் **A-B** கோட்டினால் ............................................ சாய்வு ஒன்று குறித்துக் காட்டப்படுகின்றது.

**28.** வரைபடத்தில் **C-D** கோட்டினால் குறித்துக் காட்டப்படும் நிலவுருவம் ............................................ ஆகும்.

**29.** வரைபடத்தில் **E-F** கோட்டினால் குறித்துக் காட்டப்படும் நிலவுருவம் ............................................ எனப்படும்.

**30.** வரைபடத்தின்படி, இப்பகுதியானது ............................................ வடிகால் பாங்கினைக் கொண்டிருக்கின்றது.

● **31** தொடக்கம் **40** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் தரப்பட்டுள்ள நான்கு விடைகளுள் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, அதனைக் குறித்து நிற்கும் **இலக்கத்தை** எதிரேயுள்ள **புள்ளிக்கோட்டின் மீது எழுதுக.**

**31.** உருமாறிய பாறைக்கான ஓர் உதாரணம்,
(1) நிலக்கரி (2) வைரங்கள்
(3) கருங்கல் (4) எரிமலைக்குழம்புப் பாறை (.........)

[பக். 4 ஐப் பார்க்க.

Department of Examinations Sri Lanka

32. நுல்லாபர் சமவெளிகள் அமைந்துள்ள இடம் எது?
(1) அவுஸ்திரேலியா (2) இந்தியா (3) தென் ஆபிரிக்கா (4) ரஷியா (.........)

33. • 300 mm - 500 mm இற்கும் இடையில் மழைவீழ்ச்சி
• தாவரத்தின் வளர்ச்சிப் பருவத்தில் குளிரான ஈரக் காலநிலை
• சிறந்த வடிநிலச் சமவெளி
• சோணோசம் மண்
மேலேயுள்ள பௌதிகக் காரணிகள் எந்தப் பயிர்ச்செய்கைக்கு மிக முக்கியமானது?
(1) நெல் (2) பார்லி (3) கோதுமை (4) தினை (.........)

34. பாற் பசுக்களைப் பரிமாற்றம் செய்வதற்காக அமைக்கப்பட்ட இலங்கையின் விலங்குப் பாற்பண்ணை நிலையம் அமைந்துள்ள இடம் எது?
(1) அம்பேவல (2) கனன்வில்ல
(3) வல்பிட்ட (4) மீவனபாலன (.........)

35. இலங்கையின் ஏற்றுமதிக் கிராமங்கள் சிலவற்றின் அமைவிடங்கள் அ நிரலில் தரப்பட்டுள்ளன. இவ்வமைவிடங்களுடன் தொடர்புபட்ட ஏற்றுமதிப் பயிர்கள் நிரல் ஆ இல் காட்டப்படுகின்றன. அ நிரலிலுள்ள ஒழுங்குடன் ஆ நிரலைப் பொருத்திப் பார்க்கும் பொழுது கிடைக்கும் சரியான விடையைத் தெரிவுசெய்க.

| அ | ஆ |
|---|---|
| 1. தம்பதெனியா | A - வெத்திலை |
| 2. இராஜாங்கனை | B - முந்திரி |
| 3. கட்டுகம்பொல | C - மிளகாய் |
| | D - பூக்கள் |

(1) A, B, D (2) B, C, A (3) D, C, B (4) C, A, B (.........)

36. இலங்கையில் நீர்மின் வலு நிலையங்களுடன் தொடர்புபட்ட மூன்று ஆறுகள் அ நிரலில் தரப்பட்டுள்ளன. இவ் ஆறுகளுடன் இணைந்து காணப்படும் வலு நிலையங்கள் ஆ நிரலில் காட்டப்படுகின்றன. அ நிரலிலுள்ள ஒழுங்குடன் ஆ நிரலைப் பொருத்திப் பார்க்கும் பொழுது கிடைக்கும் சரியான விடையைத் தெரிவு செய்க.

| அ | ஆ |
|---|---|
| 1. களனி ஆறு | A - விக்டோரியா |
| 2. மகாவலி ஆறு | B - கனியோன் |
| 3. களு கங்கை | C - இங்கினியாகலை |
| | D - குக்குளே கங்கை |

(1) D, A, C (2) A, B, C (3) B, A, D (4) B, C, D (.........)

37. • முன்னறிவிப்புத் தொகுதிகளை நிறுவுதல்
• சமூக விழிப்புணர்வை உருவாக்கலும் சமூகத்தின் பங்கேற்பும்
• அனர்த்த முகாமைத்துவ நிறுவகங்களை வலுவூட்டல்
அனர்த்த முகாமைத்துவத்துடன் தொடர்புள்ள மேற்கூறப்பட்ட நடவடிக்கைகள் அடங்குவது அனர்த்த முகாமைத்துவ வட்டத்தின் எந்த நிலையுடன் ஆகும்?
(1) முன் ஆயுத்தம் (2) துலங்கல் (3) மீளப்பெறல் (4) தணிப்பு (.........)

38. இலங்கையின் வடக்கு மற்றும் கிழக்கினைப் பரந்தளவில் பாதிக்கும் சூறாவளி இடர்கள் எந்தப் பருவ காலத்தில் இடம்பெறுகிறது?
(1) ஒக்டோபர் மற்றும் நவம்பர் (2) மார்ச் மற்றும் ஏப்ரல்
(3) ஜனவரி மற்றும் பெப்ரவரி (4) யூலை மற்றும் ஆகஸ்ட் (.........)

• 39 மற்றும் 40 ஆகிய வினாக்களுக்கு விடையளிப்பதற்கு பின்வரும் தகவல்களைப் பயன்படுத்துக.
A - பால் விகிதம்
B - வயது முதிர்ந்தோர் சனத்தொகை
C - வளி மாசடைதல்
D - பரும்படியான இறப்பு வீதம்
E - எரிபொருட் பயன்பாடு

39. ஒரு காரணியில் ஏற்படும் வீழ்ச்சியானது இன்னொரு காரணியில் அதிகரிப்பை ஏற்படுத்தும் என்பதைக் குறித்துக் காட்டும் கூற்றுக்களைக் கொண்ட இரு எழுத்துக்களை உள்ளடக்கிய விடை
(1) D மற்றும் B (2) A மற்றும் B (3) C மற்றும் D (4) A மற்றும் D (.........)

40. ஒரு காரணியில் ஏற்படும் அதிகரிப்பானது இன்னொரு காரணியில் அதிகரிப்பை ஏற்படுத்தும் என்பதைக் குறித்துக் காட்டும் கூற்றுகளைக் கொண்ட இரு எழுத்துக்களை உள்ளடக்கிய விடை
(1) A மற்றும் B (2) C மற்றும் D (3) E மற்றும் C (4) B மற்றும் A (.........)

* *

[பக். 5 ஐப் பார்க்க.

Department of Examinations Sri Lanka

සියලු ම හිමිකම් ඇවිරිණි / முழுப் பதிப்புரிமையுடையது /All Rights Reserved]

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் Department of Examinations, Sri Lanka

**61 | T | I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2017**

භූගෝල විද්‍යාව **I, II**
புவியியல் **I, II**
Geography **I, II**

## புவியியல் II

- ※ இவ்வினாத்தாள் **I, II** என்னும் **இரண்டு** பகுதிகளைக் கொண்டுள்ளது.
- ※ பகுதி **I** இலுள்ள வினா கட்டாயமானது. அதில் (அ), (ஆ), (இ) ஆகிய **மூன்று** பிரிவுகளுக்கும் விடை எழுதுதல் வேண்டும்.
- ※ பகுதி **II** இலிருந்து **நான்கு** வினாக்களுக்கு விடை எழுதுதல் வேண்டும்.
- ※ எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுத வேண்டும்.

### பகுதி I

**1. (அ)** 1:50 000 அளவுத்திட்டத்தில் அமைந்த இடவிளக்கப் படத்தின் ஒரு பகுதி உமக்குத் தரப்பட்டுள்ளது. படத்தினைப் பரிசீலித்து அதன் அடிப்படையில் பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக. விடைகளை எழுதுவதற்கு உமக்கு வழங்கப்பட்டுள்ள தாளினைப் (பக்கம் **8**) பயன்படுத்துக.

இலக்கம் (i) தொடக்கம் (iv) வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்குமான விடையை அடைப்புக்குறிக்குள் தரப்பட்டுள்ளவற்றிலிருந்து தெரிவுசெய்து எழுதுக.

(i) இல. ① இனால் குறித்துக் காட்டப்படுவது என்ன?
(பவளக் கற்பார் / மணல் மேடு / அலைவேலி) (01 புள்ளி)

(ii) இல. ② இனால் குறித்துக் காட்டப்படுவது என்ன?
(ஆற்றுமுகம் / கழிமுகம் / கடனீரேரி) (01 புள்ளி)

(iii) இல. ③ இனால் குறித்துக் காட்டப்படும், இளஞ்சிவப்பு நிறத்தினால் நிழற்றப்பட்டுள்ள பகுதி என்ன?
(சுற்றுலா வலயம் / பாதுகாப்புப் பகுதி / அமைக்கப்பட்ட பகுதி) (01 புள்ளி)

(iv) இல. ④ இனால் குறித்துக்காட்டப்படுவது என்ன?
(சுற்றுலா விடுதி / ஹோட்டல் / வாடி வீடு) (01 புள்ளி)

(v) இப்பகுதியில் பரந்தளவில் பரம்பிக் காணப்படும் வர்த்தகப் பயிர் என்ன? (01 புள்ளி)

(vi) **A** தொடக்கம் **B** வரை விரிவடைந்து காணப்படும் நிர்வாக எல்லை என்ன? (01 புள்ளி)

(vii) **C - D** இனால் விமானப் பாதையொன்று குறித்துக் காட்டப்படுகின்றது. அதன் நீளத்தினைக் கிலோ மீற்றர்களில் குறிப்பிடுக. (01 புள்ளி)

(viii) **E** எழுத்தினால் குறித்துக் காட்டப்படும் கோடு என்ன? (01 புள்ளி)

(ix) **F, G, H** நாற்பக்கல்களில் உள்ள மூன்று பகுதிகளில் நாளாந்தம் பல்வேறு தேவைகளுக்காகப் பெரும் எண்ணிக்கையிலான மக்களைக் கவர்ந்து வரும் பகுதி எது? (01 புள்ளி)

(x) மேலே **F, G** மற்றும் **H** ஆகிய மூன்று பகுதிகளுள், மிக உயர்ந்தளவிலான சமயப் பல்வகைமையைக் கொண்டிருக்கும் பகுதி எது? (01 புள்ளி)

**(ஆ)** உமக்குத் தரப்பட்டுள்ள உலகப் புறவுருவப் படத்தினை கவனமாகப் பரிசீலித்து கீழே தரப்பட்டுள்ள வினாக்களுக்கு விடை தருக. விடை எழுதுவதற்கு உலகப் புறவுருவப் படத்தின் அருகே தரப்பட்டுள்ள நிரலினைப் (பக்கம் **9**) பயன்படுத்துக.

(i) **A, B** மற்றும் **C** ஆகிய மூன்று எழுத்துக்களினால் குறித்துக் காட்டப்படும் மலைத் தொடர்களுள் பிரனீஸ் மலைத் தொடரைக் குறித்துக் காட்டும் எழுத்து எது?

(ii) **D, E** மற்றும் **F** எழுத்துக்களினால் காட்டப்படும் மூன்று குடா நாடுகளில் மிக அண்மையில் சூறாவளியினால் அழிவுக்குட்பட்ட புளோரிடாக் குடாநாட்டினைக் குறித்துக் காட்டும் எழுத்து எது?

(iii) **G, H** மற்றும் **J** ஆகிய மூன்று எழுத்துக்களில் விக்டோரியா ஏரியைக் குறித்துக் காட்டும் எழுத்து எது?

(iv) **K, L** மற்றும் **M** எழுத்துக்களினால் காட்டப்படும் பகுதிகளில், வில்லி வில்லிஸ் என அறியப்படும் சூறாவளியினால் பாதிக்கப்பட்ட சமுத்திரப் பகுதியைக் குறித்துக் காட்டும் எழுத்து எது?

(v) **P, Q** மற்றும் **R** எழுத்துக்களினால் காட்டப்படும் அமைவிடங்களில் டோக்கியோ கைத்தொழில் பிரதேசத்தின் அமைவிடத்தினைக் காட்டும் எழுத்து என்ன? (05 புள்ளிகள்)

[பக். 6 ஐப் பார்க்க.

Department of Examinations Sri Lanka

(இ) உமக்குத் தரப்பட்டுள்ள இலங்கைப் படத்தினைக் கவனமாகப் பரிசீலித்து, கீழே தரப்பட்டுள்ள வினாக்களுக்கு விடை தருக. விடை எழுதுவதற்காக இலங்கைப் புறவுருவப் படத்தின் அருகே தரப்பட்டுள்ள நிரலைப் (பக்கம் **9**) பயன்படுத்துக.

(i) **A, B** மற்றும் **C** எழுத்துக்களால் காட்டப்படும் மூன்று மாவட்டங்களில், மிகக் குறைவான சனத்தொகை அடர்த்தியைக் கொண்ட முல்லைத்தீவு மாவட்டத்தினைக் குறித்துக் காட்டும் எழுத்து என்ன?

(ii) **D, E** மற்றும் **F** ஆகிய மூன்று எழுத்துக்களில், சிலிக்கா மணல் படிவு பரம்பிக் காணப்படும் மாதம்பேயின் அமைவிடத்தினைக் குறித்துக் காட்டும் எழுத்து என்ன?

(iii) **G, H** மற்றும் **J** என்னும் மூன்று எழுத்துக்களில், புந்தல கடனீரேரியின் அமைவிடத்தினைக் குறித்துக் காட்டும் எழுத்து என்ன?

(iv) **K, L** மற்றும் **M** என்னும் மூன்று எழுத்துக்களில், மகாவலியின் மூன்று கிளையாறுகளைக் காட்டும் எழுத்துக்களில் உமா ஓயாவைக் குறித்துக் காட்டும் எழுத்து எது?

(v) **P, Q** மற்றும் **R** என்னும் எழுத்துக்களினால் குறித்துக்காட்டப்பட்டுள்ள மூன்று அமைவிடங்களுள், தலவாக்கலை தேயிலை ஆராய்ச்சி நிறுவகத்தின் அமைவிடத்தினைக் குறித்துக் காட்டும் எழுத்து எது? (05 புள்ளிகள்)

## பகுதி II

**2.** (i) புவியின் அமைப்பின்படி, கற்கோளத்தின் **இரண்டு** பிரதான பகுதிகளைப் பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ii) (a) அமைப்பின்படி, புவிப் படைகளில் மூடியையும், மையப் பகுதியையும் வேறுபடுத்தும் எல்லையினை இனங்காண்பதற்குப் பயன்படுத்தப்படும் பெயர் என்ன?

(b) புவி மூடிப் பகுதியின் விசேடமான அம்சங்கள் **இரண்டினைக்** குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(iii) (a) உயிர்க்கோளத்தின் தொழிற்பாட்டினைப் பாதிக்கின்ற **இரண்டு** பிரதான காரணிகளைப் பெயரிடுக.

(b) உயிர்க்கோளத்தின் சமநிலையில் ஏற்படும் சீர்குலைவுக்குக் காரணமான **இரண்டு** மானிட நடவடிக்கைகளைப் பெயரிட்டு அவற்றில் **ஒன்றினால்** ஏற்படும் பாதிப்பினை விவரிக்குக. (05 புள்ளிகள்)

**3.** உலகின் பிரதான காலநிலை வலயங்கள் அருகிலுள்ள வரைபடத்தில் காட்டப்படுகின்றது. அதனை நன்கு பரிசீலித்து பின்வரும் வினாக்களுக்கு விடையளிக்குக.




(i) வரைபடத்தில் **A** மற்றும் **B** எழுத்துக்கள் ஒவ்வொன்றினாலும் காட்டப்படும் காலநிலை வலயங்கள் **இரண்டினை** முறையே பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ii) உம்மால் மேலே (i) இல் பெயரிடப்பட்ட காலநிலை வலயங்களுள் ஒன்றினது விசேடமான அம்சங்கள் **மூன்றினைக்** குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(iii) உலகின் மானிட நடவடிக்கைகளைக் காலநிலை எவ்வாறு பாதிக்கின்றது என்பதை **மூன்று** உதாரணங்களுடன் விவரிக்குக. (05 புள்ளிகள்)

**4.** (i) (a) உலகில் பிரதானமாக தேயிலைப் பயிர்ச்செய்கைக்கு முக்கியத்துவம் பெற்ற ஆசிய நாடு (இலங்கை தவிர்ந்த) ஒன்றினையும்

(b) ஆபிரிக்க நாடு ஒன்றினையும்

முறையே பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ii) உலகின் பிரதான விவசாய நிலப்பயன்பாட்டு முறையாகக் காணப்படும் பெருந்தோட்ட விவசாயத்தின் விசேட அம்சங்கள் **மூன்றினைக்** குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(iii) இலங்கையில் தேயிலையின் உற்பத்தி மற்றும் சந்தைப்படுத்தலை அதிகரிப்பதற்கு மேற்கொள்ளப்பட்டு வரும் **மூன்று** நடவடிக்கைகளைக் குறிப்பிட்டு, அவற்றுள் **ஒன்றினைப்** பற்றிச் சுருக்கமான விவரிப்பினைத் தருக. (05 புள்ளிகள்)




**5.** (i) அருகிலுள்ள இலங்கைப் படத்தில் முறையே Ⓐ மற்றும் Ⓑ எழுத்துக்களினால் குறித்துக்காட்டப்பட்டுள்ள மீன்பிடித் துறைமுகங்கள் **இரண்டினை** முறையே குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(ii) இலங்கையின் கடல்சார் மீன்பிடிக் கைத்தொழிலுடன் தொடர்புபட்டுக் காணப்படும் **மூன்று** பிரச்சினைகளைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(iii) (a) குளங்களிலும் நீர்த்தேக்கங்களிலும் தற்பொழுது பரந்தளவில் வளர்க்கப்பட்டு வரும் நன்னீர் மீன் இனங்கள் **இரண்டினைப்** பெயரிடுக.

(b) இலங்கையில் நன்னீர் மீன்பிடிக் கைத்தொழிலை விருத்தி செய்யவேண்டிய முக்கியத்துவத்திற்கான **இரண்டு** காரணிகளை விவரிக்குக. (05 புள்ளிகள்)

[பக். 7 ஐப் பார்க்க.

Department of Examinations Sri Lanka

**6.** (i) உலகில் காரீய உற்பத்திக்குப் புகழ்ப்பெற்ற நாடுகள் (இலங்கை தவிர்ந்த) **இரண்டைப்** பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ii) காரீயத்துடன் இணைந்து காணப்படும் **மூன்று** உற்பத்திகளைப் பெயரிடுக. (03 புள்ளிகள்)

(iii) (a) இலங்கையின் காரீயக் கைத்தொழிலில் முக்கியத்துவம் பெற்று விளங்கும் குருநாகல் மாவட்டத்தில் அமைந்துள்ள சுரங்கமொன்றினதும், கேகாலை மாவட்டத்தில் அமைந்துள்ள சுரங்கமொன்றினதும் பெயரை முறையே பெயரிடுக.

(b) இலங்கையின் கனிய வளங்களைப் பேணிப் பாதுகாப்பதற்கு மேற்கொள்ளப்பட்டு வரும் **மூன்று** நடவடிக்கைகளைக் குறிப்பிடுக. (05 புள்ளிகள்)

✻ **7** தொடக்கம் **8** வரையுள்ள வினாக்களுக்கு விடையளிப்பதற்கு தரப்பட்டுள்ள உலகப் படத்தினைப் பயன்படுத்துக.




**7.** (i) கடந்த காலத்திலிருந்து இன்றுவரை, உலகின் சனத்தொகை வளர்ச்சியில் காணப்படும் பாங்குகளின்படி, பிரித்தறியக்கூடிய இரண்டு நிலைகளை இனங்காணமுடியும். இவ் **இரண்டு** நிலைகள் ஒவ்வொன்றினையும் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(ii) மேற்குறித்த உலகப்படத்தில் Ⓐ,Ⓑ மற்றும் Ⓒஇனால் குறித்துக் காட்டப்படும் சனத்தொகைச் செறிவுள்ள வலயங்கள் மூன்று அமைவு பெற்றுள்ள முக்கியமான நாடுகள் **மூன்றை** முறையே பெயரிடுக. (03 புள்ளிகள்)

(iii) இலங்கையின் சனத்தொகைக் கட்டமைப்பில் இனங்காணக்கூடிய **மூன்று** விசேடமான அம்சங்களைக் குறிப்பிட்டு, அவற்றுள் **ஒன்றினைப்** பற்றிச் சுருக்கமான விவரணம் தருக. (05 புள்ளிகள்)

**8.** (i) பின்வரும் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு உதாரணம் தருக.

(a) உயிரியல் இடர்

(b) காலநிலை இடர் (02 புள்ளிகள்)

(ii) உலகில் புவிநடுக்கங்கள் அடிக்கடி நிகழும் **மூன்று** வலயங்கள் மேலேயுள்ள உலகப் படத்தில், Ⓓ, Ⓔ மற்றும் Ⓕ என்னும் எழுத்துக்களினால் குறித்துக் காட்டப்படுகின்றன. **இம்மூன்று** வலயங்கள் ஒவ்வொன்றினையும் முறையே குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(iii) இலங்கையில் பரந்தளவில் இடம்பெற்றுவரும் இயற்கை இடர்கள் **இரண்டின்** பெயர்களைக் குறிப்பிட்டு அவற்றுள் **ஒன்றின்** விளைவினால் ஏற்படும் அனர்த்தங்களை இழிவளவாக்குவதற்கு மேற்கொள்ளக்கூடிய நடவடிக்கைகள் **மூன்றினைக்** குறிப்பிடுக. (05 புள்ளிகள்)

✻ ✻ ✻

[பக். 8 ஐப் பார்க்க.

Department of Examinations Sri Lanka

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව/இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்/Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

විභාග අංකය / சுட்டெண் / Index Number ....................................

For Examiner's Use Only: පරීක්ෂකවරයාගේ ප්‍රයෝජනය පිණිසයි. / பரீட்சகரின் உபயோகத்துக்கு மட்டும் / For Examiner's Use Only

**(61) භූගෝල විද්‍යාව II**
**புவியியல் II**
**Geography II**

1. (අ) /(அ) /(a)

(i) ....................................

(ii) ....................................

(iii) ....................................

(iv) ....................................

(v) ....................................

(vi) ....................................

(vii) ....................................

(viii) ....................................

(ix) ....................................

(x) ....................................

/10

[ பக். 9 ஐப் பார்க்க

Department of Examinations Sri Lanka
31898

(ආ) /(ஆ) /(b)




(i)
(ii)
(iii)
(iv)
(v)
5

(ඉ) /(இ) /(c)




(i)
(ii)
(iii)
(iv)
(v)
5

1. (අ) (அ) (a) $\frac{}{10}$ (ආ) (ஆ) (b) $\frac{}{5}$ (ඉ) (இ) (c) $\frac{}{5}$ = $\frac{}{20}$

Department of Examinations Sri Lanka
Department of Examinations Sri Lanka

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / முழுப் பதிப்புரிமையுடையது /All Rights Reserved]

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

61 II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2017**

භූගෝල විද්‍යාව II / புவியியல் II / **Geography II**

31900




SCALE 1 : 50 000

Department of Examinations Sri Lanka

